Regd. No. TN/MS (C) 244 ANNA Leading Progressive Tamil Daily of the People (MADRAS) Phone; 420212 4 பக்கம் விலை 50 காசு
POST WITHOUT PRE-PAYMENT LICENCE NO G6-TN-MS (C) P.P. 55

**வடிவம்**

நாட்டு மக்களே உங்கள் உள்ளத்தில் தோன்றும் எண்ணங்களுக்கு உருவமாக-லட்சியங்களுக்கு வடிவமாக நாங்கள் இருக்கிறோம்.

-பேரறிஞர் அண்ணா

# அண்ணா

நிறுவனர்: எம்.ஜி.ஆர்

**மனசாட்சி**

இன்னொருவனுக்கு அடிமையாய் உங்கள் மனசாட்சியை விற்றுவிட வேண்டாம் என்பதையும் அலசிப்பாருங்கள், ஆராயுங்கள்.

-தந்தை பெரியார்

மலர்: 8 சென்னை 3 - 6 - 1984 ஞாயிறு வெளியீடு: 4 6 - 1984 திங்கள் இதழ்: 227

- இலங்கை விடுதலைப்புலிகளுக்கு தமிழ்நாட்டில் பயிற்சி தரப்படவில்லை
- அடையாள அட்டை மூலம் கள்ள ஓட்டை தடுக்க முடியும்
- தேர்தல் கூட்டு: கழகத்தின் நிலை பற்றி விளக்கம்
- கருணாநிதி ஆட்சியில் அரசு ஊழியர்களது 12 கிராக்கிப்படி தவணை தரப்படவில்லை

## 9 லட்சம் அரசுஊழியர்கட்கு இனிப்பு செய்தி: ஒருவாரத்தில்

# 4-வது சம்பளக்கமிஷன்

## முதல்வர் புரட்சித்தலைவர் பேட்டி

**கோவை, ஜூன் 3- இன்னும் ஒரு வாரத்தில் தமிழக அரசு ஊழியர்களுக்கு 4-வது சம்பளக் கமிஷன் அமைக்கப்படும் என்று முதல்வர் புரட்சித்தலைவர் அறிவித்தார். கருணாநிதி ஆட்சியில் அரசு ஊழியர்களின் 12 தவணை கிராக்கிப்படி தரப்படவில்லை என்றும் முதல்வர் சுட்டிக் காட்டினார்.**

கோவையில் முதல்வர் புரட்சித்தலைவர் நிருபர்களுக்கு பேட்டி அளித்தார் நிருபர்களின் கேள்விகளுக்கு முதல்வர் புரட்சித்தலைவர் பின்வருமாறு பதில் அளித்தார்.

நிருபர்: தமிழ்நாட்டில் மீண்டும் மதுவிலக்கு கொண்டுவரப்படுமா?

பதில்:- கள்ளச் சாராயத்தை எப்போது ஒழிக்க முடியுமோ அப்போது மதுவிலக்கு கொண்டுவரப்படும். கள்ளச் சாராயம் தற்போது குறைந்து வருகிறது.

### மதுவிலக்கு

நிருபர் - எப்போது மதுவிலக்கு கொண்டு வரப்படும்?

பதில்:- கள்ளச் சாராயத்தை ஒழிப்பதில் 3 ஆண்டு போட்டி போட்டு முழுவெற்றி பெறவில்லை மறைந்த கர்நாடக முதலமந்திரி தேவராஜ்அர்சிடம் 2 ஆண்டில் கள்ளச் சாராயத்தை ஒழித்து விடுவேன் என்று கூறினேன். கள்ளச்சாராயத்தை ஒழிப்பதில் இன்னும் முழுவெற்றி பெற வேண்டியுள்ளது.

நிருபர்:- நகரசபை மற்றும் மாநகராட்சி தேர்தல்களில் வாக்காளர்களுக்கு போட்டோவுடன் கூடிய அடையாள கார்டு வழங்கப்படுவது சாத்தியமாகுமா?

பதில்:- கள்ள ஓட்டு போடுவதை தடுக்கும் வகையில் இதை செய்ய அரசு விரும்புகிறது ஒரு பத்திரிக்கையில் இது முடியாது என்று ஒருகுழு கூறியதாக செய்திவந்துள்ளது அது தவறு சரியாகசெய்ய முடியும் என்ற நம்பிக்கையில் தான் வாக்காளர்களுக்கு போட்டோவுடன் கூடிய அடையாளக்கார்டு கொடுக்கும் திட்டத்தை செயல்படுத்த முயற்சிக்கிறோம்.

இது பற்றி தலைமைச் செயலாளர் மற்றும் அதிகாரிகளுடன் ஆலோசனை செய்தே கொள்கை வெளியிடப்பட்டது நிச்சயமாக 4 அல்லது 5 மாதங்களில படம் எடுத்து ஒட்டி தேர்தலை நடத்த முடியும் என்று நம்புகிறேன்.

### அக்டோபருக்குள் நகரசபை தேர்தல்

நிருபர்: அப்படியானால் ஏன் நகரசபை தனி அதிகாரிகளின் பதவி காலத்தை நீடித்து இருக்கிறீர்கள்?

பதில்: அதனால்தான் பதவி காலத்தை 6 மாதம் மட்டுமே நீடித்து இருக்கிறோம், அக்டோபர்மாத முடிவுக்குள்தேர்தல் நடத்தபடும் இந்த முடிவை சிலர் ஆபத்தானது என்று கூறுகிறார்கள். தேர்தலை எப்படியாவது தடுக்க வேண்டும் என்பதால் கூறுகிறார்கள் சட்டத்தை திருத்தியாவது தேர்தல் நடத்தப்படும்.

### பெண் புகைப்படகாரர்

நிருபர்: முஸ்லிம் பெண்களை எப்படி படம்எடுக்க முடியும்?

பதில்: பெண் போட்டோகிராபர்களை வைத்து எடுக்கப்படும் முஸ்லிம் பெண்கள் ஓட்டு போடும் இடங்களில் கோஷாவை (முகத்தை மூடியிருப்பதை) எடுத்து விட்டுத்தானே ஓட்டுப்போடுகிறார்கள்.

நிருபர்: இதற்கு எவ்வளவு செலவாகும் என்று கணக்கிடப்படுகிறது?

பதில்:- ஒன்றே முக்கால் கோடி ரூபாய் செலவாகும்.

நிருபர்:- நகராட்சி-மாநகராட்சி தேர்தல் நடைபெறாது என்று கூறுகிறார்களே?

பதில்:- இடைத் தேர்தல் நடைபெறாது என்று இப்படித்தான் கூறினார்கள். இடைத் தேர்தல் நடைபெறவில்லையா?

### தேர்தல் உறவு

நிருபர்:- சமீபத்தில் இந்திராகாங்கிரஸ் பொதுச் செயலாளர் ராஜீவ் காந்திகூறும்போது மாநில கட்சியுடன் தேர்தல் உறவு கொள்ள மாட்டோம் என்று கூறியிருக்கிறாரே?

பதில்:- எங்கள் கட்சியின் பெயரே அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம் தான் பல மாநிலங்களில் உள்ள அரசியல் கட்சிகளுக்கு பாராளுமன்றத்திலோ, பாராளுமன்ற மேல்-சபையிலோ பிரதிநிதித்துவம் கூட இல்லை. என்றாலும் அகில இந்திய கட்சி என்று கூறுகிறார்கள்.

எங்கள் கட்சிக்கு கர்நாடக மாநிலத்தில் சட்டசபை உறுப்பினர் இருக்கிறார்.

எந்தககருத்தில் அவர் (ராஜீவ் காந்தி) இப்படி கூறினார் என்று தெரியவில்லை. அனைத்திந்திய அண்ணா தி. மு. கழக கூட்டணி நாட்டிற்கு நன்மையக்கும் என்று இன்னொரு பொதுச்செயலாளர் மூப்பனார் கூறி உள்ளார் கூட்டுஉண்டோ இல்லையோ எங்கள்கட்சி மாநில கட்சி அல்ல அகில இந்திய கட்சிதான்.

நிருபர்:- இந்திரா காங்கிரசுடன் கூட்டணி நீடிக்குமா?

பதில்:- இடைத் தேர்தலில் கூட்டணி அமைத்தோம். தொகுதிகளை பகிர்ந்து கொண்டோம். எதிர்காலத்தில் என்ன முடிவு ஏற்படும் என்று எப்படி கூற முடியும்?

நிருபர்:- தேசிய கட்சியுடன் கூட்டணி அமைவதை வரவேற்கிறீர்களா?

பதில்:- இதற்குமுன்பே 1977-ம் ஆண்டு தேர்தலிலும், 1980-ம் ஆண்டு தேர்தலிலும் தேசிய கட்சியுடன்தான் கூட்டணி வைத்திருந்தோம். கம்யூனிஸ்டு கட்சியும் தேசிய கட்சிதானே?

### 1 வாரத்தில் சம்பள கமிஷன்

நிருபர்:- தமிழக அரசு ஊழியர்களின் 4-வது சம்பளக் கமிஷன் எப்போது அமைககப்படும்?

பதில்:- ஒரு வாரத்திற்குள் அமைக்கபபடும்.

நிருபர்:- இடைக்கால நிவாரணம் கேட்கிறார்களே?

பதில்:- அதுபற்றியும் கமிஷன் தான் முடிவு செய்யும் கிராக்கிப்படி உயர்வு கொடுப்போம் என்று கூறினோம் அதன்படி கொடுத்தோம் கருணாநிதி ஆட்சிக் காலத்தில் 12முறைதரவேண்டிய கிராக்கிப்படி உயர்வை தரவில்லை நாங்கள் ஒன்றிரண்டு மாதங்கள் தாமதம் ஆனாலும் தவறாது கொடுத்து வருகிறோம.

நிருபர்:- தமிழ்நாட்டில் ஆட்சியைக்கைப் பற்றுவோம் என்று கருணாநிதி கூறிவருகிறாரே?

பதில்:- எல்லாகட்சிகளும் சொல்வதுதான. காங்கிரசுடன் சேர்ந்து நாங்கள் நின்றதால் மக்கள் எப்படி இருக்கிறார்கள் என்

(2-ம் பக்கம் பார்க்க)

---

தி. மு. க. தலைவர்

## கருணாநிதி மணிவிழா: முதல்வர் வாழ்த்து

சென்னை, ஜூன். 3- இன்றுதிமுகதலைவர்மு. கருணாநிதியின் 61வதுபிறந்த நாளை யொட்டிமுதல்வர் புரட்சித்தலைவர் அவருக்கு ஒரு வாழ்த்து தந்தி அனுப்பியுள்ளார்.

அந்த வாழ்த்துத் தந்தியில் முதல்வர் புரட்சித் தலைவர் கூறியிருப்பதாவது:-

இன்று (3-ந்தேதி) உங்களுடைய (கருணாநிதி) 61-வது பிறந்த நாளையொட்டி என்னுடையவாழ்த்துக்களையும் நல்லெண்ணத்தையும் தெரிவித்துக் கொள்வதில் மகிழ்ச்சி அடைகிறேன்.

உங்களுடைய பரந்த அனுபவமும், திறமைகளும் இன்னும் பல ஆண்டுகள் நாட்டிற்கு உபயோகமாக இருக்கும் என்று உறுதியாக நம்புகிறேன். ஆரோக்கியத்துடன் நீண்டகாலம் வாழ்ந்திட என் அன்னையை வேண்டிக் கொள்கிறேன்.

இவ்வாறு முதல்வர் புரட்சித்தலைவர் வாழ்த்துத் தந்தியில் குறிப்பிட்டுள்ளார்.

சட்டமன்ற மேலவை, பேரவைத் தலைவர்கள் அனைத்து அமைச்சர்கள் ஆகியோரும் "கருணாநிதி சிறப்புகள் நிறைய பெற்று பல்லாண்டு வாழவேண்டும் என்று வாழ்த்து செய்திகள் அனுப்பியுள்ளனர்.

✻

## தொலைக் காட்சியில் புரட்சித்-தலைவர் படம்

சென்னை, ஜூன் 3- சென்னை தொலைக் காட்சியில்இன்று (ஞாயிறு) மாலை ஆறு மணிக்கு புரட்சித்தலைவர் அவர்கள் நடித்த "நேற்று இன்று நாளை" திரைப்படம் ஒளிபரப்பாகிறது.

இந்தத் திரைப் படத்தைத் திரையிடக் கூடாது என்றுதி. மு. வினர் ஆட்சேபித்தனர். ஏற்கனவே திட்டமிட்டபடி "நேற்று இன்று நாளை திரைப்படம் ஒளிபரப்பாகும் என்று சென்னை தொலைக் காட்சிநிலையத்தினர் அறிவித்தனர்,

✻

கோவை

மருத்துவமனையில்

## கழகத்தோழர் புரட்சித்தலைவர் உடல் நலம் விசாரித்தார்

கோவை, ஜூன். 3- அனைத்திந்திய அண்ணா தி மு. கழகத்தின் கோவை நகரச் செயலாளர் பால சுப்பிரமணியம் காட்டூர் மருத்துவமனையில் சிகிச்சை பெற்று வருகிறார்.

முதல்வர் புரட்சித் தலைவர் மருத்துவமனைக்குச் சென்று பால சுப்பிரமணியத்தின் உடல் நலம் விசாரித்தார்.

---

### சென்னை வரும் இந்திய விண்வெளி வீரர்களுக்கு

# உற்சாகவரவேற்பு: ஆளுநர்-முதல்வர் பங்கேற்கும் விழா

### கோலாகல பாராட்டு நிகழ்ச்சி

**சென்னை ஜூன் 3- நாளை சென்னைவரும் விண்வெளிவீரர்கள் ராகேஷ்சர்மா ரவிஸ்மல்ஹோத்ரா ஆகியோருக்கு உற்சாக வரவேற்பு அளிக்கப்படவிருக்கிறது. ஆளுநர் குரானா முதல்வர் புரட்சித்தலைவர் ஆகியோரரையும் விண்வெளி வீரர்கள் சந்தித்துப்பேசுகிறார்கள்.**

இந்தியாவில் சுற்றுப் பயணம் செய்துவரும் இந்திய விண்வெளி வீரர்கள் நாளை (4-6-84) சென்னை வருகிறார்கள்.

காலை 8-மணிக்கு சென்னை மீனம்பாக்கம் விமான நிலையத்துக்கு வந்து இறங்கும்விண்வெளி வீரர்களுக்கு சிறப்பான முறையில் வரவேற்பு அளிக்கப்படவிருக்கிறது. இந்த வரவேற்பில் பொதுமக்களும் பெருமளவில் கலந்து கொள்வதற்கு வசதியாக விமான நிலையத்திற்கு செல்வதற்கும், திரும்பி வருவதற்கும் தனி பேருந்து வசதிகளும் செய்யப்பட்டுள்ளன.

விமான நிலைய வரவேற்புக்குப்பின்னர் தேசிய மாணவர் படையினரின் அணி வகுப்பு மரியாதையையும் அவர்கள் ஏற்றுக் கொள்வார்கள்.

தேசியமாணவர்படையினரிடம் (என் சி சி) சிறிது நேரம் விண்வெளிவீரர்கள இருவரும் பேசுவார்கள் அதற்காக மேடை ஒன்றும் அமைக்கப்பட்டுள்ளது.

இந்தஉரையாடல்முடிந்ததும் விண்வெளி வீரர்கள் விமான நிலையத்தில் இருந்து ராஜ்பவன் செல்கிறார்கள் அங்கே தமிழக ஆளுனர் எஸ். எல். குரானாவை அவர்கள் சந்தித்து பேசுவார்கள். பின்னர் முதல்வர் புரட்சித் தலைவரை அவரது இலலத்தில் சந்தித்து பேசுவார்கள்.

சுமார் 10 மணிஅளவில் விமான நிலையத்தில் இருந்து அவர்கள் ஸ்ரீஹரி கோட்டாவிற்குச் செல்கிறார்கள்மாலை 5மணிககு அவர்கள் தாம்பரம் விமான நிலையத்தில் இருந்து வள்ளுவர் கோட்டமவரை திறந்த ஜீப்பில ஊர்வலமாக அழைத்து வரப்படுகிறார்கள பொது மக்கள் அனைவரும் விண்வெளி வீரர்களை கண்டு களிக்கும் வணணம் இந்த ஏற்பாடு செய்யப்பட்டுளளது.

மாலை 6 மணிக்கு வள்ளுவர் கோட்டத்தில் தமிழக அரசு சார்பில் உற்சாகமான வரவேற்பு அளிக்கப்படுகிறது.

இந்த வரவேற்பு விழாவில் ஆளுநர் குரானா, முதல்வர் புரட்சித் தலைவர் ஆகியோர் கலந்து கொள்ளுகிறார்கள். தமிழக அரசு சார்பில் விண்வெளி வீரர்களுக்கு முதல்வர் புரட்சித் தலைவர் நினைவுப் பரிசுகளை வழங்குகிறார்விழாமுடிந்ததும் சுமார் இரவு 8 மணி அளவில் ராஜாஜி மண்டபத்தில விண்வெளி வீரர்களுக்கு தமிழகம் சார்பில் விருந்தொன்றும் அளிக்கப்படுகிறது.

அப்போது கலை நிகழ்ச்சிகளும் நடைபெறுகின்றன.

வரவேற்பு விழாவில் கலந்து கொள்ளும் பொது மக்களுக்கு வசதியாக பஸ் போக்கு வரத்து ஏற்பாடுகளும் சிறப்பான முறையில் செய்யப்பட்டுள்ளன.

---

# கழகத் தோழர்களுக்கு முக்கிய அறிவிப்பு

தமிழகத்தின் தலைநகருக்கு வருகை தரும் இந்திய விண்வெளி வீரர்களான திரு ராகேஷ்சர்மா திரு ரவிஷ்மல்ஹோத்ரா ஆகியோருக்கு அளிக்கப்படும் வரவேற்பு நிகழ்ச்சிகளில் கழக தோழர்கள் பெரும் திரளாக கலந்துகொள்ள வேண்டும்

இந்தியாவின் புகழை உலக அரங்கில் உயர்த்திப் பிடித்த விண்வெளி வீரர்களான ராகேஷ் சர்மாவும், ரவிஷ்மல்ஹோத்ராவும் நாளை (திங்கள்) காலை எட்டு மணிக்கு மீனம்பாக்கம் விமானநிலையம் வந்துசேருகிறார்கள்

மாலை 6 மணிக்கு வள்ளுவர் கோட்டத்தில் தமிழக மக்களின் சார்பாக தமிழகஅரசு அவர்களுக்கு வரவேற்பு அளிக்கிறது.

இந்த வாவேற்பு நிகழ்ச்சியில் தமிழக ஆளுநர் குரானா அவர்களும் முதல்வர் புரடசித்தலைவா அவர்களும் பங்கேற்கின்றனா.

இந்த இரண்டு நிகழ்ச்சிகளுக்கும் கழகத்தோழர்கள் பெருந்திரளாக திரண்டு வரவேண்டும் என்று அன்புடன் கேட்டுக் கொள்கிறேன்.

**ப.உ. சண்முகம்**
பொதுச்செயலாளர்
அனைத்திந்திய அண்ணா தி.மு. கழகம்

சென்னை-14
3-6-84

## மஞ்சள் நீராட்டுவிழா

சென்னை, ஜூன். 3— சென்னை துறைமுகப் பகுதி கழக செயலாளர் எம் வி. ராமனின் மகள் ஆர். சாந்திக்கு மஞ்சள் நீராட்டு விழா வரும் 4ந் தேதிமாலை கொண்டியம் பதி நவநீத கோவிந்த மகாலில நடைபெறுகிறது அமைச்சர் ராகாவானந் தம் மேலவை உறுப்பினர் கள் ஜேப்பியார், காடு வெட்டி கண்ணப்பன், பா. அங்கமுத்து மதுசூதனன், வரகூர் பெருமாள் எம், எல், ஏ., ரங்கசாமி எம், எல். ஏ., இசரிவேலன், திருவை அண்ணாமலை, புலவர் வேதாஏ.வி.கிருஷ்ணமூர்த்தி வெ. மாயன். கு. க. செல்வம், எஸ். ஏ. ராஜ பாண்டியன், மற்றும் மைசதைதுரைசாமி, தி. நகர் மூர்த்தி கோபாலன், மயிலை தமிழ் மணி, வ. கோதண்ட ராமன், சோமசுந்தரம், அன்புத்தம்பி, ஜெயபால், மா. சு, மணி, ஜே.குமார் ராசாராம், ஞானசேகரன் சுண்முகம், முத்தையா, துவராகநாதன், சிவபெரு மாள் மற்றும் மாவட்ட கழக பிரதிநிதிகள், வட்ட செயலாளர்கள், பகுதி கழக நிர்வாகிகள் தொழிற் சங்க பிரதிநிதிகள். மகளிர் பிரிவினர் ஆகி யோர் கலந்து கொண்டு வாழ்த்துரைவழங்குவர்.

8-ம் பத்தி தொடர்ச்சி

கோடி ரூபாய் செலவில் தமிழகத்தில்அமையவிருக் கிறது.

திருச்சிராப் பள்ளியில் இந்த மாபெரும் தொழிற் சாலை அமையவிருக் கிறது.

ஐதராபாத்தில் உள்ள ராணுவ யுத்த தளவாடஆராய்ச்சி நிறுவனம் இத் தகவலை அறிவித்திருக்கிறது.

ராணுவ ஆராய்ச்சி நிலையம் கடந்தபலநாட்க ளாகதீவிரமாக ஆராய்ச்சி செய்து இந்த புதிய படை கண்டுபிடித்துள்ளது.


## தேவை

திரு. வி. க. நகரில் உள்ள ஒரு பேக்கரியில் விற்பனை செய்ய ஆண், பெண் விற் பனையாளர்கள் தேவை. கணவன் மனைவியாகவோ அல்லது சகோதர சகோதரி யாகவோ இருந்தால் நலம். நல்ல ஊதியமும், கமிஷனும் தரப்படும். மேலும் வீடு வீடாகச் சென்று பிரசித்தி மிக்க சோப்பு விற்பனை செய்ய எட்டாம் வகுப்பு வரை படித்த ஆண், பெண் விற்பனையாளர்கள்தேவை.

நேர்முகத் தேர்வு: 10-6-84 அன்று காலை 10 மணி முதல் மாலை 5 மணி வரை நடைபெறும்.

விலாசம்:

நெ 4, விளையாட்டு மைதான தெரு கீழ்ப்பாக்கம் கார்டன், சென்னை-600 010.



## சென்னை டெலிபோன்கள்

சென்னை நகரின் இகர முறை பில்கள் மற்றும்டெலி போன் பில்கள்ஆகியவற்றை மொத்தமாக பதிவு செய்து பிரித்து அனுப்பும்வேலையை மேற்கொண்டு செய்வதற் காக சென்னை நகரில் Fourth Generation Main frame Computers சொந்த மாக வைத்துள்ள நிறுவனங் களிடமிருந்து முத்திரை யிட்ட டெண்டர்கள் வர வேற்கப்படுகின்றன.

டெண்டர் பத்திரங்கள் அக்கவுண்ட்ஸ் ஆபீஸர் (தலைமை நிலையம்) சென்னை டெலிபோன்ஸ் 69, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-600001 அவர்களிடமிருந்து எல்லா அலுவலக நாட்களிலும் காலை 10 மணி முதல் பிற் பகல் 3 மணிவரை ரூ. 10-ரொக்கம் செலுத்தி பெற் றுக்கொள்ளலாம்.

டெண்டர்கள் முத்திரை யிட்ட கவர்களில் 'Tender For Renting Out Compute Block Time' என்று குறிப் பிட்டு அதனை திரு.வி.ராம ஸ்வாமி, இயக்குனர் (Computer) சென்னைடெலி போன்ஸ், கெல்லீஸ் டெலி போன் எக்ஸ்சேஞ் பில்டிங், 22, கெல்லீஸ் சாலை, சென்னை-600010 என்ற விலாசத்திற்கு 18 6 84 தேதி பிற்பகல் 2 மணிக்கு முன்னதாக கிடைக்கும்படி அனுப்பப்பட வேண்டும். டெண்டர்கள் நேரில் ஆ ராகியுள்ள டெண்டர்தா கள் அல்லது அவர்களது பிரதிநிதிகள் முன்னிலையில் அதே தினம் பிற்பகல மணிக்கு திறக்கப்படும்

davp 711[107]8


# புரட்சித்தலைவர் பேட்டி...

(1-ம் பக்கத் தொடர்ச்சி)

பதை தெரிந்துகொள்ள வாய்ப்பு கிடைத்தது.

இந்த இடைத் தேர்த லில் உப்பிலியாபுரம் தொகுதி மீண்டும் எங்க ளுக்கே கிடைத்துள்ளது 1980ல் நடந்த தேர்தலில் எங்களுக்குத்தான் வெற்றி கிடைத்திருந்தது. முன்பு இருந்த கூட்டணியில் இருந்து புதுக் கூட்டணி அமைத்ததால் 4 தொகுதி களிலும் சேர்த்து 12 ஆயிரம் வாக்குகள் அதிகம் கிடைத்துள்ளது.

உப்பிலியாபுரம்தொகுதி யில் கடந்த தேர்தலில் 3 ஆயிரம் ஓட்டு அதிகம் பெற்றோம் இப்போது 16.205 ஓட்டு அதிகம் பெற்று இருக்கிறோம்.

தஞ்சை தொகுதியில் பல ஆயிரக்கணக்கான ஓட்டுகள் புதிதாகச்சேர்க்கப் பட்டன.

ஆனாலும் வித்தியாசம் பார்க்கவேண்டும் 1980ல் நெடுமாறன் கட்சி வேட் பாளர் எங்கள் ஆதரவில் 39,901 ஓட்டு பெற்றார். இந்த தேர்தலில் இந்திரா காங்கிரசார் 54,180 ஓட்டு பெற்றனர். 16 ஆயிரம் அதிகவாக்குகள் கிடைத்து உள்ளது.

தி. மு. க.விற்கு 6 ஆயிரம் ஓட்டுகள் அதிகம் கிடைத்து உள்ளது.

மயிலாடுதுறையில் 1980ல் 37,001 ஓட்டுகள் பெற்றோம் 84ல் 44,333 ஓட்டுகள்கிடைத்துள்ளது.

உப்பிலியாபுரத்தில் 1980ல் 41,263 ஓட்டு களும், 1984ல் 59 465 ஓட்டுகள் கிடைத் துள்ளது.

### அண்ணாநகரில் அதிக ஓட்டு

அண்ணாநகர் தொகுதி யில் 1980ல் 50,591 ஓட்டு களும் 1984-ல் 55 970 ஓட்டுகளும் பெற்றோம். கணக்கு போட்டு பார்த் தால் 1980ல் 3 இடம் தி. மு. க. கையில் இருந்தது.

இடையில் கிட்டப்பா எங்கள்கட்சியில் சேர்ந்த வர் உப்பிலியாபுரம் எங் களுக்கு திரும்ப கிடைத் தது. தஞ்சை 1971ல்இருந்து தி மு.க. கையில் இருந் தது அதை இழந்து விட் டார்கள் இந்த நிலையில் எதிர் காலத்தில் வெற்றி பெறுவோம் என்று எந்த நம்பிக்கையில் சொல் கிறார்கள் என்பது தெரிய வில்லை

உப்பிலியாபுரம் தொகுதியில் ஓட்டுப் போட மறுத்த மக்கள் குறை என்ன என்று கேட் டோம் அதை பத்திரிகை யில் பார்த்து இருப்பீர்கள் இதைவிட மக்கள் என் மீது நம்பிக்கை வைத்து உள்ள தற்கும் கட்சியின் மீது பெருமளவு நல்லெண்ணம் வைத்திருப்பதற்கும ஆதாரம் கூற முடியும்.

உண்மையில் அவர்க ளுக்கு அரசை பிடிக்க வில்லை என்றால் என்ன செய்து இருக்கவேண்டும் எதிர்க்கட்சிக்கு தான் ஓட்டு போட்டிருக்கவேண் டும். அப்படி செய்ய வில்லை. இருபது ஆண்டு கால பிரச்னைஇது பிரச் சனை தீரத்தான் இவ்வாறு செய்து உள்ளனர்.

### தோல்விக்கு ஆத்திரமே சான்று

கழக தொண்டர்கள் தாக்கப்படுவது, கொலை முயற்சி அளவிற்கு வெறி செயல்களை நடை முறைக்கு கொண்டு வரு கிறார்கள். உண்மையில் வெற்றி பெற்றி ருந்தால் ஆத்திரப்படத் தேவையில்லை.

எங்கள் அரசு செயல் படுத்துகிற திட்டம் உருவாக்குகிற திட்டம் அனைத்திற்கும் ஆதரவு மக்கள் தருகிறார்கள். இது அரசின் மீது மக்கள் கொண்டுள்ள நம்பிக்கை யைக் காட்டுகிறது என்று உறுதியாக கூறமுடியும்

நிருபர்:- போலீசார் தி. மு. க.விற்கு நன்றி உள்ளவர்களாக இருக் கிறார்கள் என்று கூறினீர் களா

பதில்:- போலீசார் பொதுவாக தமிழ்நாடு முழுவதும் ஆங்காங்கு ஒரு சிலர் கீழ்மட்டத்தில் அதி காரிகள் நன்றியுணர்வோடு அல்லதுகட்சியுணர்வோடு செயல்படுகிறார்கள் என்பது உலகம் அறிந்த உண்மை இது தவிர்க்க முடியாதது. காங்கிரஸ் ஆட்சி காலத்திற்கு பிறகு அண்ணா ஆட்சியின்போது இதுபோன்ற பிரச்சினை இருந்தது. இது புதுமை விசித்திரம் அல்ல மனோ பாவத்தை பொறுத்தது.

### கழகத்தவரை கொலை செய்ய முயற்சி

கோவையில் எங்கள் கட்சியை சேர்ந்தவர் பிளேடால் கிறப்பட்டு உள் ளார் போலீசில் புகார் செய்தால் அவரையே கைதுசெய்திருக்கிறார்கள் எதிர்க்கட்சியினர் கூறு வதை ஏற்றுக்கொண் டுள்ளதாககூறுகிறார் கள் இதை விசாரணைசெய்து உண்மையைதெரியவேண் டும். எங்கள் தோழர் களை கொலை செய்ய முயற்சி செய்கிறார்கள்.

நிருபர்:- மந்திரிசபை விஸ்தரிக்கப்படுமா?

பதில்: விஸ்தரிப்பதாக இல்லை.

நிருபர்:- விளையாட்டு துறைக்கு தனி அமைச்சர் ஏற்படுத்தப்படுவாரா?

பதில்:- விளையாட்டு வளர்ச்சி கழகம் சிவந்தி ஆதித்தன் தலைமையில் ஏற்படுத்தப் பட்டுள்ளது.

நிருபர்:- கழக மாநில மாநாடு நடைபெறுமா?

பதில்:- சமீபத்தில் பொதுக்குழு - செயற்குழு கூட்டப்பட இருக்கிறது. அதில் முடிவு செய்யப் படும்.

### ஆலைகள்

நிருபர்:- மூடப்பட் டுள்ள சில மில்களை அரசு ஏற்று நடத்துமா?

பதில்: சில மில்களை ஏற்றுநடத்தினாலும்வெற்றி பெறாது என்று நிபுணர் கள் கூறி உள்ளனர். கொஞ்சமாவது வெற்றி பெற்றால்தான் ஏற்று நடத்தலாம்.

நிருபர்:- போலீஸ் காவ லர்கள் போதுமான அளவு இல்லையே?

பதில்:- அவர்களை தேர்ந்து எடுக்க குழு அமைக்கப்பட்டு உள்ளது. நிதி நிலைக்கு ஏற்ப அவர் கள்தேர்ந்து எடுக்கப்படு வார்கள்.

### கள்ள சாராய ஒழிப்புக்கு தனி போலீஸ்

மதுவிலக்கு கொண்டு வர கள்ளச் சாராயத்தை ஒழிக்க போலீஸ் அதிகாரி கள் நியமிக்கப்பட இருக்கி றார்கள். இவர்களை அதி காரிகள்நேரடியாக தேர்ந்து எடுப்பார்கள்.

நிருபர்:- விடுதலைப் புலிகளுக்கு தமிழக அரசு ஆதரவு தருகிறதா?

பதில்:- விடுதலைப் புலி களை வைத்துக் கொள்ள வில்லை. அங்கிருந்து உயிர் பிழைக்க முடியாத வர்களுக்கு அடைக்கலம் கொடுத்து இருக்கிறோம். இலங்கைத்தமிழர் தலை வர்களுக்கு வீடுகொடுத்து இருக்கிறோம். அவர்கள முதல் - அமைச்சர் நிவா ரண நிதியில் இருந்து மாதாமாதம் ஒருதொகை கொடுக்கும்படி கேட்டுள் ளனர்.

### மறுப்பு

விடுதலை புலிகளுக்கு தமிழக அரசு போர் பயிற்சி தருகிறது என்று இலங்கை பிரதமர் கூறி வருகிறார். இந்திய அரசுக்கு தெரியாமல் ஒரு மாநில அரசு பயிற்சி தர முடியுமா?

பயிற்சி கொடுத்தால் நாடு என்ன ஆகும்? ஒரு மைப்பாட்டிற்கேஆபத்து!

நிருபர்: தமிழ்நாட்டில் குறுவை நெல்லுக்கு அதிக விலை கொடுக்கப்படுமா?

பதில்:- நிலைமைக்கு ஏற்ப தமிழகஅரசு முடிந்த நன்மையை செய்யும்.

கேள்வி:-மத்திய-மாநில உறவுகள் பற்றிகண்டறிய அமைக்கப்பட்ட சர்க் காரியா கமிஷன் குறித்து தமிழக அரசின் கருத்து என்ன?

பதில்:- இது குறித்து முன்னாள் தலைமை நீதிபதிராமபிரசாத் தலை மையில் ஒரு குழு அமைக் கப்பட்டுளளது. அந்தக் குழுவின் கருத்துக்கள் அடங்கிய அறிக்கை வரப் பெற்றதும் அதை தமிழக அரசு சர்க்காரியா கமிஷ னுக்கு அனுப்பிவைக்கும்.

நிருபர்:- கோவையிலும், மதுரையிலும் போலீஸ் கமிஷனர் அலு வலகம் அமைப்பது என்ன ஆயிற்று?

பதில்:- அமைக்கத் தான் போகிறோம். செலவு அதிகமாகிறது. அதனால் தான் தாமதம்.

இவ்வாறு முதல்வர் புரட்சித் தலைவர் கூறினார்.

வன்முறை - கலவரத்தை ஒடுக்குவோம்

# போராட்டத்தை கைவிட்டு பேச்சு வார்த்தைக்குவருக

## பஞ்சாப் கலகக்காரர்களுக்கு பிரதமர் இந்திரா அழைப்பு

**புதுடெல்லி ஜூன் 3 வன்முறை- கலவரம்நடந்தால் அதை ஒடுக்க அரசு உறுதியான நடவடிக்கை எடுக்கும். போராட் டத்தைக் கைவிட்டு பேச்சுவார்த்தைக்கு வாருங்கள் என்று பஞ்சாப் கலகக்காரர்களுக்கு பிரதமர் இந்திரா காந்தி வேண்டுகோள் விடுத்தார்.**

பிரதமர் இந்திராகாந்தி பஞ்சாப் கலவரம் குறித்து நேற்று இரவு வானொலி யில் உரை நிகழ்த் தினார். முதலில் அவர் பேச்சு இந்தியிலும் பிறகு ஆங்கிலத்திலும் ஒலிபரப் பப்பட்டது.

அவர் பேசியதாவது:—

பஞ்சாப் மாநிலத்தில் எதிர்பாராத விதமாக சீக்கியர்களின் போராட் டம் தீவிரவாதிகள்கையில் சிக்கியிருக்கிறது. தீவிர வாதிகள் வன்முறையிலும் கலவரத்திலும் ஈடுபட்டு வருகின்றனர்.

மத்திய அரசு பஞ்சாப் பிரச்சினையை தீர்க்க எந்த வித நடவடிக்கையும் எடுக்க வில்லை என்று சிலர் குற்றம்சாட்டுகிறார்கள். இது தவறான குற்றச் சாட்டாகும் மத்தியஅரசு அவர்களின் நியாயமான கோரிக்கைகள் பற்றி பரி சிலனை செய்ய தயாராக இருக்கிறதுஆனால்புதுப்புது கோரிக்கைகளாக அவர்கள்கூறிக்கொண்டே இருப்பது வேதனை அளிக்கிறது.

மத்திய அரசு அகாலி களின் மதம் சம்பந்தப் பட்டபல பிரச்சினைகளை ஏற்றுக் கொண்டுள்ளது. அதை நிறைவேற்றவும் உத்தரவிடப் பட்டிருக் கிறது.

குறித்து "நடுவர் குழு" விற்கு விடவேண்டும் என்று ஏற்கனவே முடிவு செய்யப் பட்டுள்ளது. ஆனால் சீக்கியர்கள் மீண் டும் இந்த பிரச்சினையை எழுப்புகின்றனர்.

எல்லைப் பிரச்சினை யைப் பொருத்தவரை, சண்டிகார் நகரை பஞ்சா பிற்கு கொடுக்க தயாராக இருக்கிறோம் ஆனால் அதே நேரம் பஞ்சாப் எல் லையில் உள்ள சில பகுதி கள் (இந்தி பேசும் இடம்) அரியானாவுக்கு கொடுக் கப்பட வேண்டும்.

மத்திய அரசு இதில் பல ஆலோசனைகளை கூறி வந்திருக்கிறது.

அப்படி இருந்தும் 2 மாநி லங்களுக்கும் இடையே உடன்பாடுஏற்படவில்லை. இந்த பிரச்னை குறித்து தனி கமிஷன் முடிவுக்கு விடலாம். ஆனால்அதற்கு அகாலிகள் ஒத்துக்கொள்ள வில்லை.

பொதுவாக உங்கள் பிரச்சினைகள் எதுவாக இருந்தாலும் அதுபற்றி சமரச பேச்சு நடத்தத் தயார். எனவே உங்கள் போராட்டத்தை கை விட்டு விட்டு பேச்சு வார்த்தை நடத்தமுன் வாருங்கள்.

போராட்டத்தில் ஈடுபட்டால் அது சமூக விரோத சக்திகளுக்குத் தான் உதவியாக இருக் கும். இதனால் நாடு பல வீனம் அடையும்.

உங்களுக்கு ஏதாவது சந்தேகம் இருந்தால், தவறான எண்ணம் இருந் தால் அது பற்றி நாம் பேசி முடிவு செய்வோம், பேச்சு வார்த்தை மூலம் சுமூகமான முடிவு காணலாம்.

ஆனால் அதேநேரத்தில் கலவரம் வன்முறையை ஒடுக்க அரசு உறுதியாகநட வடிக்கை எடுக்கும் என் பதையும் தெரிவித்துக் கொள்கிறேன்.

இவ்வாறு பிரதமர் இந்திரா கூறினார்.

பிரதமர் இந்திராகாந்தி யின் பேச்சு இரவு 10 மணிக்குசென்னைஉட்பட எல்லா நகரிலும் உள்ள தொலைக்காட்சி நிலை யங்களிலும் ஒளிபரப்பப் பட்டது.

### சர்க்காரியா கமிஷன்

அரசியல் சட்டத்தில் திருத்தம்செய்யவேண்டும் என்று கூறினார்கள் அதில் ஏதாவது குறை இருந்தால் சட்ட நிபுணர் களுடன் கலந்து பேசி குறையை தீர்த்து வைப் போம் என்று உறுதி கூற விரும்புகிறோம்.

மத்திய மாநில உறவை பற்றி தற்போதைய நிலையில் சர்க் காரியா கமிஷன் அது பற்றி விசாரித்து வரு கிறது.

நதி நீர் பிரச்சினை

அமிர்தசரஸ்

# பொற்கோவில் போர்க்களமாக மாற்றம்: கோயிலுக்குள் உடல்தகனமும் நடக்கிறது

புதுடெல்லி, ஜூன் 3— பஞ்சாப் மாநிலத்தில் அமிர்தசரசில் உள்ள பொற்கோவில் போர்க களகோவிலாக மாறிவிட் டது.

குருமார்கள் தங்கி உப தேசித்த பொற்கோவில் இன்று குருட்சேத்திரக் களமாக காட்சி அளிக் கிறது.

வெளிநாட்டு சக்தி களின் தூண்டுதலால் தனி நாடு (காலிஸ்தான்) உள்பட பல்வேறு கோரிக் கைகளை முன் வைத்த சீக்கியர்கள் கடந்த இரண்டு ஆண்டுகளாக போராடி வருகிறார்கள்.

இவர்களில் தீவிரவாதி கள் என்ற பெயரில வெளிநாட்டுச் சக்திகளின் கைக்கூலிகள் பஞ்சாப் மாநிலத்தையே ரணகள மாக்கி வருகிறார்கள்.

இவர்கள கட்டுக் கோப்பாக ஆயுதம் ஏந்தி சண்டைபுரிய "பப்பார் கல்சா" என்ற ராணுவ அமைப்பு ஏற்படுத்தப்பட் டுள்ளது.

இந்த அமைப்பை சேர்ந் தவர்கள் தங்களுக்கு வேண்டாதவர்களையும், அப்பாவிமக்களையும் கொன்று குவித்து விட்டு புண்ணிய ஸ்தலமாக விளங்கும் பொற்கோவிலுக்குள் ஒடி ஒளிந்துகொண்டு அதனை பாவ ஸ்தலமாக்கி கொண்டு வருகிறார்கள்.

பஞ்சாப் மக்களின் உயி ருக்கு உத்தரவாதம் அளிக்க பிரதமர் இந்திராகாந்தி ராணுவ பாதுகாப்பு தந்துள்ளார்.

இதனை பொறுக்க முடி யாத தீவிரவாதிகள் ராணுவத்தினரோடு 6 மணி நேரம் துப்பாக்கிச் சண்டை செய்தனர். ஆயிரம் ரவுண்டுகளுக்கு மேல் துப்பாக்கி ரவைகள் வெடித்தன.

இதில் பொற்கோவிலில் வணங்க வந்த ஒரு பெண் உள்பட 12 பேர் மாண்டு போனார்கள்.

"பப்பார் கல்சா" உறுப்பினர் குல்வந்த் சிங் என்ற மெங்காசிங் என்பவர் கொல்லப்பட்ட வர்களில் ஒருவர் ஆவார்.

அவருடைய உடல் தகனம் பொற்கோவில் வளாகத்திற்குள் அமைந் திருக்கும் மஞ்சிசாஹிப குருத்துவாராவிற்கு அரு காமையில்நடைபெற்றது.

இந்த இறுதிச் சடங்கில் அகாலி தலைவர் சந்த் அர்சந்த்சிங் லோங்கோ வால், குருத்துவாரா பிர பந்த கமிட்டி தலைவர் ஜி. எஸ். டோஹ்ரா உள்பட பலர் கலந்து கொண்ட னர்.

1762-ம் ஆண்டிற்குப் பிறகு பொற்கோவிலில் இத்தகைய உடல் தகனம் செய்யப்பட்டிருப்பது இதுவே முதலாகும்.

அப்போது (1762) முகலாய வம்சத்தை சேர்ந்த ஜஹான்கான் என்பவன் படைகொண்டு தாக்கி பொற்கோவிலை வசப்படுத்திக் கொண் டான். அவனிடமிருந்து அக்கோவிலை மீட்க சீக்கிய வீரர்கள் போரிட்டனர். அதில் வீரமரணம் அடைந்த சீக்கிய வீரர்களின் உடல் கள் பொற்கோவில் வளா கத்திற்குள் தகனம்செய்யப் பட்டன.

அதன் பிறகு இப்போது மெங்காசிங் உடல் தகனம நடைபெற்றது.

# ரூ.70 கோடியில் திருச்சியில் பீரங்கி ஆலை

ஐதராபாத், ஜூன் 3.

எதிரிகளின் டாங்கு களை தாக்கி அழிக்கும் யுத்த தளவாடங்களை இந்திய ராணுவத் துறை இப்போது கண்டுபிடித் துள்ளது

ராணுவவிஞ்ஞான ஆராய்ச்சியாளர்களும் போர் தளவாட உற்பத்தி நிபுணர்களும் கூட்டாக ஆராய்ச்சி செய்து டாங்கு களை அழிக்கும் யுத்தக் கருவிகளை கண்டு பிடித் துள்ளனர்.

இந்த முறைப்படி தயா ரிக்கும் பீரங்கி குண்டு வீச்சு மற்றும் ராட்சச துப்பாக்கிகள் சுமார் 2 கிலோ மீட்டர் தொலை வில் உள்ள எதிரிகளின் டாங்குகளை தாக்கி சின்னா பின்னமாக்கும்.

அத்தகைய பலம் வாய்ந்த பீரங்கி-ராட்சச துப்பாக்கித் தொழிற் சாலை ஒன்று சுமார் 70

(1-ம் பத்தி பார்க்க)


இந்திய விண்வெளி வீரர்களுக்கு

## மாபெரும் வரவேற்பு

4-6 84 காலை 8 மணி

சென்னை மீனம்பாக்கம் விமானநிலையம்

சென்னை மீனம்பாக்கம் வருகை தரும் இந்திய விண்வெளி வீரர்கள்

திரு. ரவீஷ்மல்ஹோத்ரா

திரு. ராகேஷ்சர்மா

ஆகியோருக்கு மாபெரும் வரவேற்பு அளிக்கப்படும்

பொதுமக்கள் மீனம்பாக்கம் வருவதற்கு நகரத்தின் எல்லாப் பகுதிகளிலிருந்தும் பேருந்து வசதி செய்யப்பட்டிருக்கிறது

அனைவரும் வாரீர்!

தமிழ்நாடு அரசு



## மணவிழா அழைப்பிதழ்

அன்புடையீர் வணக்கம்,

திருவள்ளுவர் ஆண்டு 2016 வைகாசித் திங்கள் 22-ம் நாள் (4-6-1984) திங்கட்கிழமை காலை 9 மணிக்கு மேல் 10-30 மணிக்குள்

நான்

திருவண்ணாமலை திருவள்ளுவர் தெருவைச் சேர்ந்த டி. எஸ். பொன்னுசாமி கவுண்டரின் குமாரத்தி

செல்வி சாந்தியை

என் வாழ்க்கை துணைவியாக ஏற்கும் மங்கல விழாவினை

மாண்புமிகு டாக்டர் நாவலர் அவர்கள் தமிழக நிதியமைச்சர் தலைமையிலும்

திருமிகு ப. உ. ச. அவர்கள் கழக பொதுச்செயலாளர் முன்னிலையிலும்

திரு. கோ. விஸ்வநாதன் எம்.எல்.ஏ.

அவர்கள் வரவேற்புரை நிகழ்த்த

கீழ்பென்னாத்தூர் வாசன் திரையரங்கில் நடைபெறும் மணவிழாவிற்கு வருகைதந்து வாழ்த்திட அன்புடன் அழைக்கிறேன்

இவண்

கே. பி. கண்ணன், பி. ஏ.,

ஒன்றிய செயலாளர் அனைத்திந்திய அண்ணா தி. மு. கழகம் தலைவர், விவசாய கூட்டுறவு சங்கம் கீழ்பென்னாத்தூர், வடாற்காடு.

வாழ்த்துரை வழங்குவோர்

மாண்புமிகு விஜயசாரதி

திருமிகு ஏ. எம். ரகுநாதன், சட்டமன்ற உறுப்பினர்கள் ஏ சி. சண்முகம், டி. அன்பழகன், என். குலசேகரபாண்டியன், ஏ. எம். சேதுராமன், சி. கோபால், பி. எம். வெங்கடேசன், சி. குப்புசாமி, டி. சாமிக்கண்ணு மற்றும் காவனூர் பச்சையப்பன், ஏ. வா. வேலு, இரா. சா. மாறன், கே. ஜெயராமன் மற்றும் ஒன்றிய, நகர, கிளைக்கழக செயலாளர்கள்


PUBLISHED BY K. RAVINDRAN ON BEHALF OF THANGAMANI PUBLICATIONS AND PRINTED BY HIM AT ALL INDIA ANNA D.M.K PERARIGNAR ANNA TRUST PRESS AT 34, NELSON MANICKAM ROAD MADRAS-600029

Editor E. PARASURAMAN

## நடிப்புக்கு முழுக்கு போட்ட நடிகை

தமிழ்திரை உலகில் கொடிகட்டி பறக்கும் முன்னணி நட்சத்திரங்களில் ஒருவர் மகாலட்சுமி நடிகை வாழ்க்கை மேல் வெறுப்பு ஏற்பட தனது நடிப்பு தொழிலை சிறிது சிறிதாக குறைத்து வருகிறார் கடைசியாக கோர்ட் சம்பந்தப்பட்ட காட்சி ஒன்றில் நடித்த அவர் பத்திரிகையாளர்களை சந்தித்து தான் நடிப்பு துறையிலிருந்து விலக போவதை அறிவிக்கிறார் நிருபர்கள் அவரை ஏன்? எதற்காக? திருமணம் செய்து கொள்ள போகிறீர்களா? திருமணம் ஆகிவிட்டதா? ஒரு குழந்தை கூட இருக்கிறதாமே? என்று கேள்வி மேல் கேள்வியாக கேட்க நோ.. நோ என்று கூறிய மகாலட்சுமி கார் அருகில் வரும் போது மயங்கி விழுகிறார். கே.ஆர். ஜி. பிலிம் சர்க்யூட் தயாரிக்கும் "ஆலய தீபம்" படத்திற்காக இக்காட்சி பி. பாஸ்கர்ராவ் ஒளிப்பதிவில் இயக்குனர் ஸ்ரீதரால் படமாக்கப்பட்டது நடிகையாக சுஜாதா நடிககபத்திரிகையாளராக உண்மையிலேயே பத்திரிக்கையாளர்கள் நடிக்க ஏ, வி எம்மில் படமாக்கப்பட்டது.

## நல்ல நாள்

### -: விமர்சனம் :-

பழிவாங்கும் படலத்தை வைத்துப் பின்னப்பட்டது இதன் கதை தந்தையைக் கொன்றவனை பழிவாங்கிவிட்டு சிறைக்கு செல்கிறான் சின்னதுரை. சின்னதுரையால் பழிவாங்கப்பட்ட பண்ணையாரின் மகன் சின்னதுரையைபழிவாங்க துடிக்கிறான.

இடையிலே மாமன் மச்சான் என்ற பலமான உறவு பிணைக்கப்படுகிறது. இறுதியில் சின்னதுரை செய்தது நியாயம் என்பதை உணர்ந்து பழிவாங்கும் படலத்தைக் கைவிட்டு இருவரும் நண்பர்களாகிறார்கள்.

சின்னதுரையாக விஜய்காந்த் நடித்துள்ளார். தங்கை மேல் பாசத்தை பொழியும் போதும் சரி, வீராப்புடன் எதிரிகளுடன் மோதும் போதும் சரி விஜயகாந்த் தனது தனி முத்திரையை பதித்துள்ளார்.

முரட்டு உருவத்துடன் கொலை வெறி பிடித்து அலையும் பாத்திரம் தியாகராஜனுக்கு வெகு நன்றாக சித்தரித்துள்ளார் விஜய்காந்தின் தங்கையாக வரும் நளினி துக்காக அலையும் போதும் சரிகுடும்பத்தலைவியான போதும் சரி தனது பண்பட்ட நடிப்பை வெளிப்படுத்துகிறார்.

டீக்கடை உரிமையாளராக வரும் துளசிக்கு நல்ல சுவைக்சுவை பாத்திரம். தன்னாலும் நகைச்சுவைபாத்திரத்தை திறம்பட செய்யமுடியும் என்பதை இப்படத்தில் நிருபித்துள்ளார்

விஜயகுமாரி, ராமதாஸ் உசிலைமணி வி கோபாலகிருஷ்ணன், தேங்காய் சீனிவாசன் கே கண்ணன் ஆகியோரும் தங்கள பாத்திரத்தை சரிவரச் செய்துளளனர்

இளையராஜாவின் இசையும் நன்றாக இருக் (1-ம் பத்தி பாக்க)



திரைத்துறையில் முன்னேற துடிக்கும் ஸ்ரீஉஷா

## 'தொட்டால் பூ மலரும்'

கோவை சி. எம் என். ராமசந்திரன் தயாரிக்கும் வண்ணப்படம் அபர்ணா பிக்சர்ஸ் 'தொட்டால் பூ மலரும்' பாக்கியராஜ் கதை இலாகாவில் பணிபுரிந்த பைரவ இதன் கதை - வசனம் - பாடல்கள - டைரக்ஷன் பொறுப்புகளை ஏற்றுள்ளார்.

நடிகர், நடிகைகள தேர்வு நடந்து வருகிறது. இதன படப்பிடிப்பு ஜூன் மாதம் தெங்கு மராட்டா பகுதியில் நடக்கிறது.



நரசிம்மராஜ் - ரோகிணி
படம்: நவமோகினி

## வைதேகி காத்திருந்தாள்

தமிழ்த் திரைப்பட வசன கர்த்தாக்களான பஞ்சு அருணாசலமும், தூயவனும் இணைந்து அப்பு மூவிஸ் சார்பில் 'வைதேகி காத்திருந்தாள்' வண்ணப்படத்தை தயாரிக்கின்றனர்.

இந்தப் படத்தில் விஜயகாந்த், ஊர்வசி, ரேவதி, சுலக்சனா மற்றும் பலர் நடிக்கின்றனர்.

ஆர். சுந்தரராஜன் இப்படத்திற்கான கதை, திரைக்கதை, வசனம் எழுதி டைரக்ட் செய்கிறார்.

இசையைஇளையராஜா அமைக்க ஒளிப்பதிவை ராஜராஜன்கவனிக்கிறார் ஜூன் 11-ந்தேதி காரைக்குடியை அடுத்த ஆத்தங்குடியில் படப்பிடிப்பு தொடங்குகிறது. பஞ்சு அருணாசலம், தூயவன தயாரிக்கும் இப்படம் ஒரு துரித தயாரிப்பாகும்.

## நிச்சயத்தில் பாண்டியன்

"அந்த சில நாட்கள்" படத்தை தயாரித்த ஓம் சித்ராவின் அடுத்த தயாரிப்பான 'நிச்சயம்' படப்பிடிப்பு துவங்கியது. இப்படத்தில் முதன் முறையாக பாண்டியன் இரு வேடங்களில் தோன்றுகிறார்.

"தாம்பத்யம் ஒரு சங்கீதம்", "அந்த சில நாட்கள்", "சூரப்புலி" போன்ற படங்களைஇயக்கிய டைரக்டர் வெங்கட் கதை, வசனம் எழுதி இயக்குகிறார். நளினி, ஒய். விஜயா, காந்திமதி, பொன்னி, ரத்தியராஜ், பாலாஜி, போன்றோர் நடிக்கும் இப்படத்தின் ஒளிப்பதிவை கஜேந்திரமணி கவனிக்க இசையை கங்கை அமரன் அமைக்க, எம்.இளங்கோ தயாரிக்கிறார்.

## வாலிபரின் கன்னத்தில் அனுராதா தந்த பரிசு

தவறுக்கு மன்னிப்புக் கேட்ட வாலிபரின் கன்னத்தில் ஓங்கி அறைந்ததுடன் அவரது மோட்டார் சைக்கிளின் மீது கல்லைத் தூக்கிப் போட்டு உடைத்து நாசப்படுத்திஉள்ளார் நடிகை அனுராதா!

இந்த நிகழ்ச்சி அண்மையில் நடந்தது. சமீபத்தில் நடிகை அனுராதா தனது தோழிகள் சிலபேருடன் கோல்டன் பீச்சுக்கு ஓய்வு எடுக்கச் சென்றிருந்தார். கடற்கரையையொட்டிஉள்ள புல் வெளியில் அவர்கள் அனைவரும் உட்கார்ந்து இருந்தார்கள்.

அப்போது அந்த வழியாக மோட்டார் சைக்கிளில் ஒரு வாலிபர் வேகமாகச் சென்றார். மழை பெய்து இருந்ததால் ரோடு சேரும் சகதியுமாக இருந்தது. இதனால் மோட்டார் சைக்கிளில் சென்ற வேகத்தில் ரோடு அருகே புல்வெளியில் அமர்ந்திருந்த அனுராதா மீது சகதி தெறித்தது. இதனால் அனுராதா கடும் கோபம் கொண்டார்.

எதிர்பாராமல் நடந்துவிட்ட அசம்பாவிதத்தை உணர்ந்தவாலிபர் மோட்டார் சைக்கிளை நிறுத்திவிட்டு வந்து தவறுக்கு மன்னிப்புக் கேட்டார்.

ஆனால் கோபத்தில் இருந்த அனுராதா சட்டென்று எழுந்ததும் "பளார்" என்று அந்த வாலிபரின் கன்னத்தில் ஓங்கி அறைந்து விட்டார்.

அத்துடன் நில்லாமல் பக்கத்தில் கிடந்த பெரிய கல்லொன்றை எடுத்து மோட்டார் சைக்கிளின் மீது அடித்து அதை சின்னா பின்னப்படுத்தினார். எட்டி உதைத்ததில் முன்பக்க லைட் நொறுங்கியது.

உடனே தனது தோழிகளுடன் அங்கிருந்து விறுவிறுவென்று சென்றுவிட்டார். இந்த எதிர்பாராத செயலால் அதிர்ச்சி அடைந்த வாலிபர் அப்படியே அசந்து நின்றார்.

இப்படியொரு காட்சி மகாலட்சுமி ஆர்ட்சின் 'மன்மதா என்னைத் தேடிவா' வண்ணப் படத்திற்காக கோல்டன்பீச்சில் படமாக்கப்பட்டது. இதன் கதை வசனத்தை எழுதி திருச்செங்கோடு மாரிமுத்து டைரக்டு செய்தார் வாலிபராகஸ்ரீகுமார் நடிக்க செயராமன் ஒளிப்பதிவு செய்தார்.

மற்றும் இதில் மனோரமா, ஜெயமாலா, லலிதஸ்ரீ சொப்னப்பிரியா, சுவாதி, டைப்பிஸ்ட் கோபு, என்னத்தேகன்னையா, ஜஸ்டின்வெட்டுக்கிளி ஆகியோர் நடிக்கிறார்கள்.




## ஆலங்குடிசோமுவின் 'அவங்களை பார்த்தீங்களா?'

கவிஞர் ஆலங்குடி சோமுவின் வித்தாலயா நிறுவனம் தயாரிக்கும் "அவங்களை பார்த்தீங்களா' படம் ஊட்டி, கொடைக்கானல் சத்திய மங்கலம், கோபிசெட்டி பாளையம், - கோவை பகுதிகளில் வளருகிறது.

சுரேஷ், இளவரசி, பாஸ்கர், வனிதா, ஜீவிதா ஒய். ஜி. மகேந்திரன, கல்லாப்பெட்டி சிங்காரம சுமித்ரா, மேனகா, காந்திமதி சி.ஐ.டி. சகுந்தலா இவர்களுடன் மௌலியும் பங்கேற்று நடிக்க தேவி பிரசாத் ஒளிப்பதிவு செய்தார்.

ஆலங்குடி சோமு, வாலி கங்கைஅமரன் பாடல்களுக்கு ஷியாம் இசை அமைக்கிறார்.

சத்தசண்முகம், ராமசாமி, ஆலங்குடிசரவணன் கூட்டாக தயாரிக்கும் இப்படம் துரிதமாக வளர்கிறது.

கதை, திரைக்கதை, வசனம் தீட்டி மௌலி இயக்குகிறார்.



ரகு - ராணி
படம் ; குயிலே குயிலே

## சரிதாவிற்கு மலேசியா வாசு தந்த அதிர்ச்சி

மகா கொடியவனான மலையப்பனிடம் வேலை செய்பவன் பழனி அவனது உண்மை சொருபம் புரியாதவன் விசுவாசமாய் வேலை செய்து வருபவன்.

ஒருநாள் நெல்லுக்குத்த மூட்டையில் இருந்து நெல்லை அள்ளிக் கொண்டிருக்கும் தன் மனைவி பொன்னுத்தாயிடம்வரும் பழனி "பொன்னு நான் அவசரமாக வெளியே போறேன், வரநேரமாகும் நீ அய்யாவுக்கு சாப்பாடு எடுத்துக்கிட்டு போய் தோப்பு வீட்ல இருந்து அவர் சாப்பிட்டதுக்கு அப்புறம்வந்தா போதும்" என கூற மலையப்பனைப் பற்றி விவரம் அறிந்த பொன்னுத்தாயி "மாமா, எனக்கு பச்சை நெல்லு குத்தனும் மாட்டு தொழுவம் சமுவனும், வேலை நிறையா இருக்கு" என மறுத்துக் கூறுகிறாள். எரிச்சலடைந்த பழனி "தொலையாத வேலை. அய்யா சாப்பிடறதை விட இது முக்கியமா போச்சா. அய்யாவுக்கு சாப்பாடு கொண்டுபோக மறந்துடாதே" என்று கண்டிப்புடன் கூறிவிட்டு வெளியே போக செய்வதறியாத திகைப்புடன் கண்கலங்கியவாறு பொன்னுத்தாய் கணவன் போவதையே பார்த்து நிற்கிறாள.

சித்திரமஹால் ஸ்டுடியோவில் எடுக்கப்பட்ட இந்த காட்சியில் பழனியாக ராஜேஷும், பொன்னுத்தாயாக சரிதாவும், மலையப்பனாகமலேஷியா வாசுதேவனும் நடித்தனர்

மற்றும் சுரேஷ் சசிகலா ஜோடியுடன் அருந்ததி, நூர்ஜஹான், கே. கே சௌந்தர், எம். ஆர். ஆர் ரகு இடிச்சபுளி செல்வராஜ், எம். எஸ் கோபிநாத, திடீர் கன்னையா 'பசி' நாராயணன் ஆகியோர் நடிக்கின்றனர்.

கொலுசு படத்திற்கு மலேஷியா வாசுதேவன் இசையமைக்க காமகோடியன் பாடல்களை எழுத ஏ.கே. பரமகுரு ஒளிப்பதிவில் கதை, திரைக்கதை, வசனம், டைரக்ஷனை கே.எஸ். மாதங்கன். ஏற்றுள்ளார்.



விஜயகாந்த் - சசிகலா
படம் சபாஷ்

## ஜெயமாலினி-அனுராதா ஜோதிலட்சுமி கவர்ச்சி நடனம்

திருப்பதிசாமி பிக்சர்ஸ் சார்பில் எஸ்.என்.எஸ். திருமால் துரிதமாக தயாரித்து வரும் 24 மணி நேரம்' படத்திற்காக கவர்ச்சி கன்னிகள் ஜோதிலட்சுமி, ஜெயமாலினி அனுராதா மூவரும் பங்கு கொண்ட

"கல்லூரி மாணவராம்
கல்யாணம் ஆனவராம்
என் வீட்டுப்பள்ளியிலே
எல்லோரும்
மாணவராம்

என்ற பாடல் காட்சி சபாபதி ஒளிப்பதிவில் படமாக்கப்பட்டது.

இம்மாதம் திரைக்குவரும் இதில் மோகன், நளினி, இளவரசி, சொப்னா சத்யராஜ் ராமனாதன் இன்னும பலர் நடித்திருக்கும் இதற்கு இளையராஜாஇசைஅமைக்கிறார்.

கதை, திரைக்கதை, வசனம், எழுதி மணிவண்ணன் இயக்கி வருகிறார்.

## சிலுக்குவின் கதாபாத்திரங்கள்

செந்தில் வடிவேலன் சினி ஆர்ட்ஸ் நிறுவனம் தயாரிக்கும்வண்ணப்படம் "கதாபாத்திரங்கள்".

எம். ஜோதிராஜ், முருகேசன் இணைந்து தயாரித்து வரும் இப்படத்தின் திரைக்கதை - டைரக்ஷன் பொறுப்புகளை சி.பி. கோலப்பன் கவனித்து வருகிறார். சிராஜ் கதை-வசனம் எழுத, பி. என். சுந்தரம் ஒளிப்பதிவு செய்கிறார். சங்கர்-கணேஷ் இசையமைக்கிறார்.

சந்திரசேகர், பிரசாத், கவுண்டமணி, கல்லா பெட்டிசிங்காரம், வினோத், புதுமுகம் தனுசு, லட்சுமி சித்ரா, எம். சரோஜா மற்றும் பலர் நடிக்கிறார்கள். சிலுக்கு இப்படத்தின் கதாநாயகியாக நடிக்கிறார்.

## தலையணை மந்திரம்

நவீனா பிலிம்சார் தயாரித்து வரும்வண்ணப்படம் 'கணவனை கைக்குள் போடுவது எப்படி!'

இப்போது இப்படத்தின் பெயரை 'தலையணை மந்திரம்' என்று மாற்றியுள்ளனர்.

ஏ. வெங்கடேஷ் இயக்கி தயாரித்து வரும் இப்படத்தின் வசனத்தை என் எஸ். ரவிசங்கர் எழுத இளையராஜா இசையமைக்கிறார். பசுவராஜ் ஒளிப்பதிவு செய்ய ராஜசேகர் படத்தொகுப்பை கவனிக்கிறார்.

பாண்டியன், சோ, பிரசாத, வி. கோபாலகிருஷ்ணன், செந்தில், சுலக்ஷணா, சசிகலா, வடிவுக்கரசி, புஷ்பலதா மற்றும் பலர் நடிகிறார்கள் இதன் படப்பிடிப்பு வேகமாக நடந்து வருகிறது.

### 3-ம் பத்தி தொடர்ச்சி

கிறது.

தூயவனின் நகைச்சுவையான, நறுக்குத் தெரித்த வசனங்கள் ரசிக்கும் படியாக உள்ளது.

இறுதிக் காட்சி வரை படத்தின் முடிவு இப்படித்தான் இருக்கும் என்று ஊகிக்க முடியாத அளவிற்கும், சஸ்பென்ஸ் குறையாத அளவிற்கும், தொய்வில்லாது தியாகராஜன் படத்தை இயக்கியுள்ளார். பி. அண்டு சி செண்டர்களில் இது நல்ல வரவேற்பை பெறும் மொத்தத்தில் இந்த நாள் நன்றாகவே இருக்கி

:- பாலுமணி :-



ஊர்வசி
படம்
நெருப்புக்குள்
ஈரம்

### 8-ம் பத்தி தொடர்ச்சி

முத்துலிங்கம், டைரக்டர் துரை, வி. என். சுந்தரம் சேதுராமன், சலம், மற்றும் ஏராளமான விநியோகஸ்தர்களும், திரையரங்கினரும், பத்திரிகையாளர்களும் கலந்து கொண்டு விழாவை சிறப்பித்தனர்.

குழந்தைகளுடன் ரஜினிகாந்த் பூரித்து மகிழ்வது
அன்புள்ள ரஜினிகாந்த படத்திற்காக

## பிரகாசம் இயக்கும் சாதனை

ஏ. எஸ். பிரகாசம் கதை - திரைக்கதை, வசனம் எழுதி டைரக்ட் செய்யும் பிரகாஷ் புரொடக்ஷன்ஸ் சாதனை வண்ணப்படத்தின் துவக்க விழா வாகினி படப்பிடிப்பு நிலையத்தில் நடைபெற்றது.

டைக்டர் ஸ்ரீதர் காமிராவை முடுக்கி வைத்து படப்பிடிப்பை துவக்கி வைத்தார். துவக்க விழாவிற்காக வாகினி ஸ்டியோ முழுவதும் விழாக்கோலம் பூண்டிருந்தது. விழாவில் சிவாஜிகணேசன், பிரபு, ராம்குமார், இளையராஜா, ஒய். ஜி. மகேந்திரன, விஜுசக்கரவர்த்தி ஹாஸ்மோகன் தயாரிப்பாளர்கள்ஏவிஎம். குமரன் பாலாஜி, முக்தா ராமசாமி, கே. ஆர். ஜி. பிலிம்கோ காதர், சாதிக், பாலுமகேந்திரா, எம் பாஸ்கர், கலைஞானம் ராஜ்கண்ணு, கலைமணி, ஏசியன் பிக்சர் காதர், ஜி. வி. சி. கார்பைன்ஸ் நடராஜன் மதிஒளிசண்முகம், சிவசுப்பிரமணியம் ஜானி, சே சங்கர், வாலி

(6-ம் பத்தி பாக்க)

வன்முறை கலவர எதிரொலி

# பஞ்சாப் மாநில நிர்வாகப் பொறுப்பை ராணுவம் ஏற்றது

## வெளிநாட்டினர் நுழைய தடை

புதுடெல்லி, ஜூன். 3- பஞ்சாப் மாநிலத்தில் அமைதியை நிலைநாட்டும் பொறுப்பினை ராணுவம் மேற்கொண்டது. ஏற்கனவே பஞ்சாபில் உள்ள எல்லைப் பாதுகாப்புப் படையினரும் மத்திய ரிசர்வ் போலீஸ் படையினரும் ராணுவத்தின் கீழ் தொடர்ந்து பணிபுரிவார்கள்.

பஞ்சாப் மாநிலம் முழுவதும் வெளிநாட்டவர் சட்டமும் அமுலுக்கு வந்திருக்கிறது. இந்தச் சட்டத்தின் கீழ் இனி பஞ்சாப் மாநிலத்திற்குச் செல்லும் வெளிநாட்டினர் மைய அரசின் அனுமதி பெற்றே செல்ல வேண்டும்.

ஏற்கனவே பஞ்சாப் மாநிலத்தில் உள்ள வெளிநாட்டினர் பஞ்சாப் அரசிடம் தனி அனுமதி பெற்றே தங்க வேண்டும்.

பஞ்சாப் கவர்னர் பாண்டேக்கு பாதுகாப்பு ஆலோசகராக மேற்கு பிராந்திய ராணுவ தளபதி ஆர். எஸ். தயாள் நியமிக்கப்பட்டுள்ளார்.

சண்டிகார் யூனியன் பிரதேச நிர்வாகியாகவும் பஞ்சாப் கவர்னர் பாண்டே செயல்படுவார்.

அண்மைக்காலமாக அகாலிதள தீவிரவாதிகளின் வன்முறைக் கிளர்ச்சிகள் அதிகரித்து வந்தன. அத்துடன் பஞ்சாபில் உணவு தானிய நடமாட்டத்தை தடுக்கப் போவதாக அகாலிதளம் அறிவித்தது.

இதனைத் தொடர்ந்து மைய அரசு மேற் கண்ட நடவடிக்கைகளை எடுத்திருக்கிறது.

### ஊரடங்கு

ஹோஷியார்பூர் நகரில் ஜனதாத் தலைவரை அகாலி தள தீவிர வாதிகள் சுட்டுக் கொன்றனர். இதனைத் தொடர்ந்து வன்முறைக் கலவரங்கள் வெடித்தன. ஹோஷியார்பூர், பாட்டியாலா, மோகா, லூதியானா, கன்னா ஆகியநகரங்களில் ஊரடங்குச்சட்டம் பிறப்பிக்கப் பட்டிருக்கிறது.

அமிர்தசரஸ் நகரம் நான்குபுறங்களிலும் சுவர்களைக்கொண்டதும் நகருக்குள் வருவதற்கான எல்லா வழிகளிலும் பாதுகாப்புப் படையினர் நிறுத்தப்பட்டுள்ளனர் நகருக்குள் வருகிறவர்கள் - நகரை விட்டு வெளியேசெல்பவர்கள் சோதனையிடப் படுகிறார்கள்.

லூதியானா நகரில் ஊரடங்குச் சட்டத்தை மீறுபவர்களை உடனடியாக சுட்டுக் கொல்லும்படி உத்தரவிடப்பட்டிருக்கிறது.

### படுகொலை

பஞ்சாப் மாநிலத்தில் ஒரே நாளில் அகாலி தள தீவிரவாதிகளால் 11 பேர் சுட்டுக்கொல்லப்பட்டனர் இருபதுக்கு மேற்பட்டவர்கள் காயமடைந்தனர்.

சுட்டுக் கொல்லப்பட்டவர்களில் பஞ்சாப் மாநில ஜனதாக் கட்சித் தலைவர் ஓம் பிரகாஷ் பக்காவும் ஒருவர்.

ஹோஷியார்பூர் நகரில் சுட்டுக் கொல்லப்பட்ட ஓம் பிரகாஷ் பக்கா ஆரியசமாஜ தலைவரும்கூட

தாரிவால் நகரப் பூங்காவில் இருந்தவர்கள் மீது அகாலிதளத் தீவிரவாதிகள் துப்பாக்கிப் பிரயோகம் செய்தனர். பூங்காவில் இருந்த நால்வர் அந்த இடத்திலேயே மரணமடைந்தனர் 8 பேர் காயமடைந்தனர்.

பாடிண்டா நகரில்தீவிரவாதிகள் வெடிகுண்டுகளை வீசினார்கள்.

எல்லா நகரங்களிலும் தீவிரவாதிகள் நேற்று வன்முறையில் ஈடுபட்டார்கள்.

# 15 பேரை கொன்றவனை போலீஸ் சுட்டுக் கொன்றது

லக்னோ, ஜூன் 3— எட்டாவா மாவட்டத்தில் ஆஸ்தா என்ற கிராமத்தில் கடந்த வாரம் அப்பாவி கிராமவாசிகள் 15 பேர் நிற்க வைத்து கொல்லப்பட்ட

6-ம் பத்தி பார்க்க

# பஞ்சாப் பொற்-கோவிலை சுற்றி ராணுவம்

அமிர்தசரஸ் நகரின்முக்கிய இடங்களில் ராணுவத்தினர் நிறுத்தப்பட்டிருக்கின்றனர். இதனைத் தொடர்ந்து ஊரடங்கு சட்டம் தளர்த்தப் படுகிறது.

அகாலி தள தீவிர வாதிகள் அடைக்கலம் புகுந்துள்ளபொற்கோயிலைசுற்றி ராணுவம் நிறுத்தப்பட்டிருக்கிறது.

என்றாலும் கிராமப் பகுதிகளில் தீவிரவாதிகளின் வன்முறைச் செயல்கள்அதிகரித்திருக்கின்றன

குருதாஸ்பூர் மாவட்டத்தில் தேரா பாபா நானக் நகரில் மூவரை தீவிர வாதிகள் சுட்டுக் கொன்றனர்.

அமிர்தசரஸ் மாவட்டத்தில் இரண்டு கிராமங்களில் கடைக்காரர்களை தீவிரவாதிகள் சுட்டனர் ஒருகிராமத்தின் பள்ளிக் கூடத்திற்கு நெருப்பு வைத்தனர் ஒரு சாராயக் கடையையும் கொளுத தினர்.

# கருணாநிதியின் ஜிகினா வேலை: பண்ருட்டியார் தாக்கு

வேலூர் ஜூன் 3- ஆட்சியைப்பிடிக்கலாம் என்று மனப்பால் குடிக்கும் கருணாநிதியின் எண்ணம நிறைவேறாது இருந்ததை இழந்த கருணாநிதி தனக்கே ஆதாயம் கிடைத்தது போல் ஜிகினா வேலை காட்டுகிறார் என்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் கூறினார்.



வடாற்காடு மாவட்டம் பெரணமல்லூரில் நடந்த கழகக் கூட்டத்தில் பங்கேற்று அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேசியதாவது:—

நடந்து முடிந்தஇடைத் தேர்தலில் கழகஅணிக்கே ஆதாயம் கிடைத்துள்ளது ஆனால் தங்கள் அணிக்கு ஆதாயம் கிடைத்துள்ளது என்று கருணாநிதி ஜிகினா வேலை காட்டுகிறார்.

1967 ம் ஆண்டு முதலே தஞ்சை, மாயவரம் தொகுதிகள் தி.மு.க விடம் உள்ளன இதில் தஞ்சையை எங்கள் அணி கைப்பற்றியுள்ளது. ஆனால் தங்கள் அணி வெற்றி பெற்றதைப் போல் கருணாநிதி பேசுகிறார். அடுத்த முறை ஆட்சியைப் பிடிப்போம் என்று மனப்பால் குடிக்கிறார். இலவு காத்த கிளிபோலகாத்துக் கொண்டிருக்கிறார். நிச்சயம் அது நடக்காது.

இவ்வாறு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பேசினார்.

### பஸ் நிலையத்துக்கு அடிக்கல்

முன்னதாக பெரணமல்லூரில் பஸ் நிலையத்திற்கு அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் அடிக்கல் நாட்டினார். இதுதவிர இந்திரபவனம், மேய்சாத்தமங்கலம், அனாதைமங்கலம்ஆகியஇடங்களில் நடைபெற்ற சத்துணவு மையம், மகப்பேறு நிலையம் கட்டிடத்திறப்பு விழாக்களிலும் அமைச்சர் பண்ருட்டி ராமச்சந்திரன் பங்கேற்றார். இந்தவிழாக்களில் சட்டமன்ற உறுப்பினர்கள் ஏ.சி. சண்முகம், வெங்கடேசன் ஆகியோரும் பங்கேற்றனர்.

(4ம் பத்தி தொடர்ச்சி)

னர். இந்தக் கொலைக்கு முக்கிய காரணமான ஸ்ரீராம்என்ற கொள்ளை கோஷ்டி தலைவனை போலீசார் தேடிவந்தனர் நேற்று அவன்ஜாலோன என்ற கிராமத்தில் தங்கியிருப்பதாக போலீசாருக்கு தகவல் கிடைத்துஅவனை பிடிக்க சென்றனர்.

அவன் போலீசாரை பார்த்ததும் துப்பாக்கியால் சுட்டான் பதிலுக்கு போலீசார் சுட்டதில் ஸ்ரீராம் துப்பாக்கி குண்டுக்குபலியாகி இறந்தான்.


சென்னை துறைமுகப்பகுதி கழக செயலாளர்

எம். வி. ராமன்

இல்ல மஞ்சள் நீராட்டு விழாவுக்கு 4-ந் தேதி திங்கள் (மாலை) கொண்டியம்பதிக்கு வருகை தரும்

மாண்புமிகு அமைச்சர்

எஸ். ராகவானந்தம்

மேலவை அரசு கொறடா

ஜேப்பியார் எம். எல். சி.

காடுவெட்டிகண்ணப்பன் எம்.எல்.சி, பா. அங்கமுத்து எம்.எல்.சி. இ. மதுசூதனன் எம்.எல்.சி. ஏ வி. கிருஷ்ணமூர்த்தி, கு.க. செல்வம் எஸ். ஏ. ராஜபாண்டியன் ஆகியோர்களை வருக வருக என வரவேற்கிறோம்

இங்ஙனம்

வி.கே. கபூர், கே. எல்லப்பன்,
எம்.ஏ. காதர் கே. எஸ். சுந்தரேசன்
வி. நடராஜன் ஆர். காளிதாசன்
சியார், அமிர்பாட்சா



இந்திய விண்வெளி வீரர்களின் மாபெரும் வரவேற்பு ஊர்வலம்

புறப்படும் இடம்: தாம்பரம்
4.6.84 மாலை 5 மணி

இந்திய விண்வெளி வீரர்கள்

திரு. ரவீஷ்மல்கோத்ரா,
திரு. ராகேஷ்சர்மா

ஆகியோர் திறந்த ஜீப்பில் ஊர்வலமாக வருவார்கள்

ஊர்வலம் செல்லும் பாதை:-
குரோம்பேட்டை, பல்லாவரம், மீனம்பாக்கம், கிண்டி, சைதாப்பேட்டை, அண்ணாசாலை, தேனாம்பேட்டைசந்திப்பு தியாகராயர்சாலை, கலைவாணர்சிலை, வழியாக வள்ளுவர்கோட்டம் வந்தடையும்.

பொது மக்கள் அலைகடலென திரண்டு

வரவேற்க வாரீர்!

தமிழ்நாடு அரசு



இந்திய விண்வெளி வீரர்களுக்கு மாபெரும் வரவேற்பு விழா



4.6.1984 மாலை 6 மணி
வள்ளுவர் கோட்டம், சென்னை.

தமிழ்நாடு அரசின் சார்பில்
இந்திய விண்வெளி வீரர்கள்
திரு. ரவீஷ் மல்கோத்ரா,
திரு. ராகேஷ் சர்மா
ஆகியோருக்கு மாபெரும் வரவேற்பு அளிக்கப்படும்.

மேதகு ஆளுநர்
திரு. எஸ். எல். குரானா அவர்கள்
தலைமையில்

மாண்புமிகு முதலமைச்சர்
டாக்டர் எம். ஜி. ஆர் அவர்கள்
நினைவுப் பரிசுகள் அளித்து பாராட்டுரை வழங்குவார்கள்.



4.6.84: காலை 8 மணியளவில் மீனம்பாக்கம் விமான நிலையத்தில் வரவேற்பு அளிக்கப்படும்.
மாலை 5 மணிக்கு ஊர்வலம்: தாம்பரத்திலிருந்து வள்ளுவர் கோட்டம் வரை திறந்த ஜீப்பில் வருகை தருவார்கள்.

வள்ளுவர் கோட்டத்தில் விண்வெளிப் பயணம் பற்றிய புகைப் படக்கண்காட்சி நடைபெறும்.

அனைவரும் வருக.

இயக்குநர்,
செய்தி மக்கள் தொடர்புத் துறை தமிழ்நாடு அரசு

DIPR/ELEGANT